අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

ඉස්ලාම් I
இஸ்லாம் I
Islam I

44 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
*Two hours*

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான அல்லது மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** 'அல்லாஹ் அளவின்றி வழங்குபவன்' என்பதைக் குறித்துக் காட்டும் அவனது திருநாமம்
(1) அஸ் ஸலாம் (2) அல் காலிக்
(3) அர் ரஸ்ஸாக் (4) அல் பாரி
(5) அர்ரஊப்

**2.** ஸப்அ மஸானி எனப்படும் ஸூரா
(1) அல் பாத்திஹா (2) அல் பலக் (3) அல் அ.்.லா (4) அல் ளுஹா (5) அல் கஹ்பு

**3.** நபி (ஸல்) அவர்களால் மக்காவிலிருந்து மதீனாவுக்கு அனுப்பப்பட்ட தூதர்
(1) ஜ.்.ப் இப்னு அபூதாலிப் (ரழி) (2) அபூமூஸா அல் அஷ்அரி (ரழி)
(3) முஆத் இப்னு ஜபல் (ரழி) (4) உஸாமா பின் ஸெய்த் (ரழி)
(5) முஸ்அப் பின் உமைர் (ரழி)

**4.** இஸ்லாத்தில் மூன்று புனித மஸ்ஜித்கள் உள்ளன. அவற்றுள் ஹிஜாஸுக்கு வெளியே உள்ளது
(1) மஸ்ஜிதுல் அக்ஸா (2) மஸ்ஜிதுந் நபவி
(3) மஸ்ஜிதுல் ஹராம் (4) மஸ்ஜித் குபா
(5) மஸ்ஜித் கிப்லதைன்

**5.** இறைவன் இல்லை என வாதிடுவோர்
(1) முஷ்ரிக் (2) காபிர் (3) முனாபிக் (4) முல்ஹித் (5) முர்தத்

**6.** தொழும் முறையைத் தெரிந்து கொள்வது
(1) பர்ளு (2) ஸுன்னத் (3) வாஜிப் (4) முபாஹ் (5) ஷர்த்து

**7.** ஸுப்ஹுத் தொழுகையின் அதானில் "அஸ்ஸலாத்து கைருன் மினந்நவ்ம்" என்ற தொடரை முதலில் சொன்னவர்
(1) உமர் (ரலி) (2) அலி (ரலி) (3) பிலால் (ரலி) (4) அபூபக்ர் (ரலி) (5) அம்மார் (ரலி)

**8.** 'பற்றற்ற வாழ்வைக்' குறிக்கும் சொல்
(1) ரிழா (2) வர.்.(3) ஸுஹ்த் (4) தவக்குல் (5) மஹப்பா

**9.** ஹஜ்ஜிலும் உம்றாவிலும் இடம்பெறும் ஒரு செயற்பாடு
(1) தவாப் செய்தல் (2) அறபாவில் தரித்தல்
(3) மினாவில் தங்குதல் (4) ஜம்ராக்களில் கல்லெறிதல்
(5) குறிப்பிட்ட காலத்தில் மட்டும் நிறைவேற்றல்

**10.** 'மறுமையில் மனிதனின் செயற்பாடுகள் நிறுக்கப்படுகின்றன' என்பதனை எடுத்துக்காட்டும் சொல்
(1) ஹிஸாப் (2) மீஸான் (3) ஸிராத் (4) ஹஷ்ர் (5) லிவாஉல் ஹம்த்

**11.** ஒவ்வோர் அறிவிப்பாளர் பரம்பரையிலும் மிக அதிகமான ராவிகளால் அறிவிக்கப்படும் ஹதீஸ்
(1) முதவாதிர் (2) ஆஹாத் (3) ஸஹீஹ் (4) ஹஸன் (5) ளஈப்

[பக். 2 ஐப் பார்க்க

12. ஸபா நாட்டு அரசியை இஸ்லாத்தின் பக்கம் அழைத்த நபி
(1) நூஹ் (அலை) (2) தாவூத் (அலை)
(3) ஸுலைமான் (அலை) (4) இப்றாஹீம் (அலை)
(5) ஈஸா (அலை)

13. இயற்கையான நீர்ப்பாசனம் மூலம் இடம்பெறும் விவசாயத்திற்கான ஸகாத்
(1) இரண்டரை வீதம் (2) ஐந்து வீதம்
(3) பத்து வீதம் (4) பதினைந்து வீதம்
(5) இருபது வீதம்

14. வாரிசுரிமையில் அஸ்ஹாபுல் புருளில் **அடங்காதவர்**
(1) தங்கை (2) தாய் (3) பாட்டன்
(4) உடன் பிறந்த சகோதரி (5) கணவனின் தாய்

15. முஸ்லிம் விவாகப் பதிவாளர் ஒருவர் தனது மகளை மணமுடித்துவைத்தார். அதில் அவர் வகித்த பாத்திரம் எது ?
(1) வகீல் (2) வலி (3) காழி (4) ஷாஹித் (5) இமாம்

16. இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் பின்வரும் எந்தக் குழுவில் அடங்குவார் ?
(1) முபஸ்ஸிர்கள் (2) முஹத்திஸ்கள் (3) முஜ்தஹித்கள்
(4) ராவிகள் (5) காரிகள்

17. ஒரு முஸ்லிம், ஒரு நோயாளியைத் தரிசிக்கும்போது ஓத வேண்டிய துஆ
(1) இன்சா அல்லாஹ் (2) மாஷா அல்லாஹ் (3) ஷபாகல்லாஹ்
(4) பாரகல்லாஹ் (5) பீ அமானில்லாஹ்

18. நோன்பு நோற்பதற்கு ஸுன்னத்தாக்கப்பட்ட அய்யாமுல் பீழ் தினங்கள்,
(1) வருடத்திற்கு ஒரு முறை வரும். (2) வருடத்திற்கு இரு முறை வரும்.
(3) மாதத்துக்கு ஒரு முறை வரும். (4) மாதத்துக்கு இரு முறை வரும்.
(5) வாரத்துக்கு ஒரு முறை வரும்.

19. பின்வரும் சொற்களில் விவசாயத்துடன் மாத்திரம் தொடர்புடைய சொல்
(1) இஜாரா (2) முஷாரகா (3) முழாரபா (4) முஸாரஆ (5) முராபஹா

20. "மௌனம் சம்மதத்துக்கு அறிகுறி" என்ற கருத்தில் வெளியான இஜ்மா
(1) இஜ்மா ஸரீஹி (2) இஜ்மா கௌலி
(3) இஜ்மா அக்ஸரிய்யா (4) இஜ்மா பிஅலீ
(5) இஜ்மா ஸுகூத்தி

21. "உலகம் அழியப்போகிறது என்ற நிலை தோன்றினாலும் கையிலிருக்கும் பயிரை நாட்டிவிடல் வேண்டும்" என்ற தொடர் பின்வருவனவற்றுள் எதனைக் குறிக்கின்றது ?
(1) கிலாபத் (2) இபாதத் (3) இமாரத் (4) நஸீஹத் (5) அமானத்

22. "வியாபாரமும் வட்டியும் சமமானதன்று" இதற்கான பிரதான காரணம்,
(1) வியாபாரமும் வட்டியும் பணத்துடன் தொடர்புடையவை.
(2) வியாபாரத்திலும் வட்டியிலும் கொடுப்போரும் கொள்வோரும் உளர்.
(3) வியாபாரத்திலும் வட்டியிலும் வருமானம் கிடைக்கும்.
(4) வியாபாரத்தில் நட்டமேற்பட்டாலும் வட்டியில் நட்டமேற்படாது.
(5) ஜாஹிலிய்யாக் காலத்தில் வியாபாரமும் வட்டியும் ஒன்றாகக் கணிக்கப்பட்டன.

23. 'முவத்தா' ஒரு தனித்துவமான நூலாகக் கொள்ளப்படக் காரணம்,
(1) அது மதீனாவில் தொகுக்கப்பட்டது.
(2) இமாம் மாலிக் அவர்களால் அதற்கு விளக்கம் கொடுக்கப்பட்டது.
(3) அது ஹதீஸ் நூலாகவும் பிக்ஹ் நூலாகவும் உள்ளது.
(4) அதற்கு பல விரிவுரைகள் எழுதப்பட்டன.
(5) அதனைக் கற்பதற்குக் கலீபாக்கள்கூட மதீனாவுக்கு வந்தனர்.



24. ஒருவர் தனது மகனால் கொலை செய்யப்பட்டால் அதன் விளைவாக,
(1) மரணித்தவரின் சொத்தில் மகனுக்கு 2/3 பங்கு கிடைக்கும்.
(2) மரணித்தவரின் சொத்தில் மகனுக்கு 1/3 பங்கு கிடைக்கும்.
(3) மரணித்தவரின் சொத்தில் மகனுக்குப் பங்கு கிடையாது.
(4) தந்தையின் பங்கும் மகனின் பங்கும் அரச உடைமையாகும்.
(5) தந்தைக்குப் பங்கு உண்டு. மகனுக்குப் பங்கு இல்லை.

**25.** பயணிகள் சிலர் தமது பிரயாணத்தில் தொழுகைகளைச் சேர்த்தும் சுருக்கியும் தொழுதனர். அவ்வேளை அவர்கள் கையாண்ட **தவறான** முறை எது ?
(1) ளுஹரையும் அஸரையும் சேர்த்துத் தொழுதமை
(2) ளுஹரையும் அஸரையும் சுருக்கித் தொழுதமை
(3) மக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதமை
(4) மக்ரிபையும் இஷாவையும் சுருக்கித் தொழுதமை
(5) ஸுப்ஹை சேர்க்காமலும் சுருக்காமலும் தொழுதமை

**26.** சட்டத்துறையில் பங்களிப்புச் செய்த இலங்கை முஸ்லிம் பிரமுகர்
(1) டி. பி. ஜயா (2) பதியுத்தீன் மஹ்மூத் (3) எம். டி. அக்பர்
(4) ஏ. எம். ஏ. அஸீஸ் (5) ஐ. எல். எம். அப்துல் அஸீஸ்

**27.** ஹதீஸ் கலையில் 'அர்பஈன்' எனப்படும் நாற்பது ஹதீஸ்களை பலர் தொகுத்துள்ளனர். அவர்களில் பிரபலமானவர்
(1) இமாமம் நவவி (ரஹ்) (2) இமாமம் திர்மிதீ (ரஹ்)
(3) இமாம் புகாரி (ரஹ்) (4) இமாம் இப்னு ஹஜ்ர் (ரஹ்)
(5) இமாம் அபூய.்லா அல் மவ்ஸிலீ (ரஹ்)

**28.** பின்வருவனவற்றுள் **தவறான** கூற்று எது ?
(1) 'அல் இபாதத்' என்பது அல்லாஹ்வுக்காக அடியான் நிறைவேற்றும் வணக்கமாகும்.
(2) 'அத் தப்லீக்' என்பது ரஸூல்மார்களின் வாஜிபான ஸிபத்துகளில் ஒன்றாகும்.
(3) 'அல் ஹய்யு' என்பது அல்லாஹ்வுக்குரிய வாஜிபான ஸிபாத்துகளில் ஒன்றாகும்.
(4) 'அல் பதானத்' என்பது நபிமார்களுக்குரிய முஸ்தஹீலான ஸிபாத்துகளில் ஒன்றாகும்.
(5) 'மு.்ஜிஸாத்' என்பது நபிமார்கள் காண்பிக்கும் அற்புதங்களைக் குறிக்கும்.

**29.** பின்வரும் விடயங்களைக் கருதுக.

A – ஸகாத் கூட்டமாக வழங்கப்படல் வேண்டும்.
B – முஸ்லிம் அல்லாதவர்களுக்கும் ஸகாத் வழங்கப்படலாம்.
C – ஸகாத் செயற்பாடு ஆண்டு முழுவதும் இடம்பெற வேண்டும்.
D – ஸகாத் நிறுவனமயப்படுத்தப்படல் வேண்டும்.
E – 'பீஸபீலில்லாஹ்' என்ற பங்கை உத்தரவாதப்படுத்தல் வேண்டும்.



மேலே குறிப்பிடப்பட்ட கூற்றுகளில் ஸகாத் பெறத் தகுதியானவர்களில் 'ஆமில்' எனப்படுபவரும் அடங்குவதற்கான காரணம்
(1) A B C (2) A C D (3) B C D (4) B C E (5) B D E

**30.** குலபா உர்ராஷிதூன் பற்றிய சில கூற்றுகள் கீழே காணப்படுகின்றன.

A – ஸகீபா பனீஸாஇதாவில் கலீபாவாகத் தெரிவுசெய்யப்பட்டார்.
B – அபூபக்ர் (ரலி) அவர்கள் தனக்குப் பின் அவரை கலீபாவாக நியமித்தார்.
C – கலீபாவாக வருவதற்கு தகுதியானவராக கருதப்பட்ட அறுவருள் ஒருவர்.
D – கவாரிஜ்களில் ஒருவனால் கொலை செய்யப்பட்டான்.
E – அவருக்காக பை அதுர் ரிள்வான் இடம்பெற்றது.
F – நபி (ஸல்) அவர்களின் மருமகன்களில் ஒருவர்.

மேலுள்ளவற்றுள் உஸ்மான் (ரலி) தொடர்பான கூற்றுகள் தொகுதி
(1) A B C (2) A C E (3) C D E (4) C E F (5) D E F

**31.** "யா அல்லாஹ், இவர்களில் யாரை அதிகம் நேசிக்கிறாயோ அவரைக்கொண்டு இந்த மார்க்கத்தை மேலோங்கச் செய்வாயாக" என நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள். இங்கு 'இவர்களில்' எனக் குறிப்பிடப்படுவோர் யாவர் ?
(1) அம்ர் இப்னு ஆஸ் - காலித் இப்னு வலீத்
(2) அம்ர் இப்னு ஹிஷாம் - உமர் இப்னு கத்தாப்
(3) உமர் இப்னு கத்தாப் - அம்ர் இப்னு ஜஹ்ம்
(4) அம்ர் இப்னு ஹிஷாம் - அம்ர் இப்னுல் ஆஸ்
(5) உமர் இப்னு அப்துல் அஸீஸ் - உமர் இப்னு கத்தாப்

**32.** பின்வருவனவற்றுள் இரண்டு நவீன தப்ஸீர்கள்
(1) தப்ஸீர் ஜலாலைன் - அல் கஷ்ஷாப்
(2) அல்-பஹ்றுல் முஹீத் - மபாதிஹுல் கைப்
(3) அல்-காஸின் - அல் பௌஸுல் கபீர்
(4) பீ ளிலாலில் குர்ஆன் - தப்ஹீமுல் குர்ஆன்
(5) ருஹுல் மஆனி - ஜவாஹிருல் குர்ஆன்

09703

● **33** தொடக்கம் **37** வரையிலுள்ள ஒவ்வொரு வினாவிலும் **X, Y** என்னும் நிரல்களின் கீழ் சில தகவல்கள் தரப்பட்டுள்ளன. **X** நிரலில் உள்ளவை **Y** நிரலில் உள்ளவற்றுடன் ஏதேனும் ஒரு வகையில் தொடர்புபட்டவை. **Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுடன் சரியாகத் தொடர்புபடுத்தும்போது பொருத்தமாக அமையும் சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**33.**

| X | Y |
|---|---|
| (i) ஹிஜ்ரி 80 | A – மாலிக் இப்னு அனஸ் (ரலி) |
| (ii) ஹிஜ்ரி 93 | B – நுஃமான் பின் ஸாபித் (ரலி) |
| (iii) ஹிஜ்ரி 150 | C – முஹம்மத் பின் இஸ்மாயில் (ரஹ்) |
| (iv) ஹிஜ்ரி 194 | D – முஹம்மத் இப்னு இத்ரிஸ் (ரஹ்) |

(1) A B C D (2) A D C B (3) B A D C (4) B C D A (5) C D B A

**34.**

| X | Y |
|---|---|
| (i) மூஸா (அலை) | A – நம்ரூத் |
| (ii) தாவூத் (அலை) | B – பிர்அவ்ன் |
| (iii) இப்றாஹிம் (அலை) | C – அபூஜஹ்ல் |
| (iv) முஹம்மத் (ஸல்) | D – தாலூத் |

(1) A B C D (2) B C A D (3) B D A C (4) C A D B (5) D B A C

**35.**

| X | Y |
|---|---|
| (i) அஜா இபுல் ஹிந்த் | A – இமாம் ஷாபிஈ (ரஹ்) |
| (ii) புதூஹுல் புல்தான் | B – இமாம் ஸுலைமான் இப்னு அஷ்அத் |
| (iii) அர் ரிஸாலா | C – பலாதுரி |
| (iv) ஸுனன் அபீதாவுத் | D – இப்னு ஷஹ்ரயார் |

(1) A B C D (2) B C D A (3) C D A B (4) D C A B (5) D B A C

**36.**

| X | Y |
|---|---|
| (i) ஒரு முஸ்லிமுக்கு கடமையாக்கப்பட்ட தர்மத்தைக் குறிப்பது. | A – வக்பு |
| (ii) தர்மத்தைக் குறிப்பது. | B – ஸதகா |
| (iii) அல்லாஹ்வின் திருப்தியைநாடி பொதுமக்களுக்கு ஏதேனுமொன்றை உரித்தாக்குவது. | C – ஹதியா |
| (iv) அன்பளிப்பாகக் கொடுப்பது. | D – ஸகாத் |

(1) A B C D (2) B C D A (3) C D A B (4) D A B C (5) D A C B

**37.**

| X | Y |
|---|---|
| (i) இமாம் அபூஹனிபா (ரஹ்) | A – கூபா |
| (ii) இமாம் அபூயூஸுப் (ரஹ்) | B – பக்தாத் |
| (iii) இமாம் ஷாபிஈ (ரஹ்) | C – நைஸாபூர் |
| (iv) இமாம் முஸ்லிம் (ரஹ்) | D – காஸா |

(1) A B C D (2) A D B C (3) B C D A (4) B D A C (5) C D A B

● **38** தொடக்கம் **41** வரையுள்ள வினாக்களில் உள்ள சொற்களில் இரண்டு சொற்கள் மற்றிரு சொற்களுடன் ஏதாவதொரு வகையில் தொடர்பினைக் கொண்டுள்ளன. அவ்வாறான தொடர்பினைக் **கொண்டிராத** எஞ்சிய சொல்லைத் தெரிவுசெய்க.

**38.** (1) அஸர் (2) ளுஹர் (3) வித்ர்
(4) லுஹா (5) குஸுபைன்

**39.** (1) அறபா (2) ஸபா (3) மர்வா
(4) ஹஜ்ருல் அஸ்வத் (5) ருக்னுல் யமானி

**40.** (1) அல் இஜாரா (2) கர்ள் (3) ரிபா
(4) நபகா (5) கிஸ்வா

**41.** (1) ஈலாஉ (2) இத்தா (3) ஜிஸ்யா
(4) ளிஹார் (5) உஷ்ர்

[பக். 5 ஐப் பார்க்க

● **42** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள சோடிக் கூற்றுகளுக்குப் பின்வரும் (1), (2), (3), (4), (5) என்பனவற்றில் மிகப் பொருத்தமானதைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தைக்** குறிப்பிடுக.

| **இலக்கம்** | **முதலாம் கூற்று** | **இரண்டாம் கூற்று** |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | பிழையானது | சரியானது |
| (3) | சரியானது | பிழையானது |
| (4) | பிழையானது | பிழையானது |
| (5) | சரியானது | முதலாம் கூற்றை மேலும் விளக்குகிறது. |

| | **முதலாம் கூற்று** | **இரண்டாம் கூற்று** |
|---|---|---|
| **42.** | கலீபா உமர் (ரலி) ஹதீஸ்களை நூலுருவில் தொகுக்குமாறு கட்டளையிட்டார். | ஸஹீஹான ஹதீஸ் தொகுப்புகள் உருவாவதற்கு இமாம் ஸுஹ்ரி முன்னோடியாக அமைந்தார். |
| **43.** | ஸஹாபாக்கள் காலத்தில் பிக்ஹு ஒரு தனித்துறையாக வளர்ந்தது. | இமாம் அபூஹனீபா பிக்ஹுத்துறையில் முன்னோடியாக அமைந்தார். |
| **44.** | முஹம்மத் (ஸல்) குறைஷிகளுடன் செய்துகொண்ட உடன்படிக்கை ஹுதைபியா உடன்படிக்கையாகும். | ஹுதைபியா உடன்படிக்கை மதீனாவில் இடம்பெற்றது. |
| **45.** | கைபரில் முஸ்லிம்களுக்கும் யூதர்களுக்குமிடையில் போர் நிகழ்ந்தது. | மதீனா சாசனம் என்பது நபி (ஸல்) அவர்களுக்கும் யூதர்களுக்குமிடையில் இடம்பெற்ற உடன்படிக்கையாகும். |
| **46.** | 'மத்ரஸதுல் ரஉயு' என்னும் சட்டப் பிரிவினர் ஆரம்ப காலத்தில் மதீனாவில் காணப்பட்டனர். | இமாம் ஷாபிஈ (ரஹ்) மத்ரஸதுல் அஸர் என்னும் சட்டத்துறையைச் சார்ந்தோரின் தலைவரானார். |
| **47.** | இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் உரோமர்களுக்கும் பாரசீகர்களுக்குமிடையே தென் அரேபியாவில் நிகழ்ந்த போரில் பாரசீகர் வென்றனர். அடுத்த கட்டப் போரில் உரோமர் வெல்வார்கள் என ஸுரதுர் ரூம் முன்னறிவிப்புச் செய்தது. | கி. பி. 624 இல் இடம்பெற்ற போரில் உரோமர் பாரசீகரை வெற்றிகொண்டனர். |
| **48.** | 'அஷ் அரிய்யா' எனப்படுவோர் ஸுன்னத் வல்ஜமாஅத்தைச் சார்ந்தவராவர். | கலீபா மாமூன் மு'.தஸிலாக்களை ஆதரித்தார். |
| **49.** | உங்களின் மொழிகள் வேறுபட்டிருப்பது இறை அத்தாட்சிகளில் ஒன்று. | இலங்கை முஸ்லிம்கள் பன்மொழி பேசும் மக்களோடு சுமுகமாக வாழ்கின்றனர். |
| **50.** | அகிதா பிரிவுகள் தோன்றுவதற்கு வரலாற்று நிகழ்வுகள் காரணமாக அமைந்தன. | அகிதா பிரிவுகள் தோன்றுவதற்கு சில கலீபாக்களும் காரணமாக இருந்தனர். |

* * *

09703

AL/2015/44/T-II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

ඉස්ලාම් II
இஸ்லாம் II
Islam II

44 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** நபி (ஸல்) அவர்களின் வாழ்வில் பின்வரும் நிகழ்வுகளின் முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுக.
(i) கதீஜா (ரழி) அவர்களை மணம்முடித்தல்
(ii) க.்.பாவில் ஹஜ்ருல் அஸ்வதை பதித்தல்
(iii) உமர் (ரழி) இஸ்லாத்தை ஏற்றல்
(iv) பைஅதுல் அகபா



**2.** பின்வரும் விடயங்கள் பற்றி விளக்குக.
(i) தலாக் பற்றிய இஸ்லாத்தின் கண்ணோட்டம்
(ii) தலாக் அனுமதிக்கப்படும் சந்தர்ப்பங்கள்
(iii) தலாக்கின் வகைகள்
(iv) தலாக்கினால் குடும்பத்தில் ஏற்படும் பாதிப்புகள்

**3.** பின்வரும் விடயங்கள் பற்றி விளக்குக.
(i) வியாபாரம் செல்லுபடியாவதற்கான விதிமுறைகள்
(ii) ஹஜ்ஜின் பர்ளுகளும் வாஜிபுகளும்
(iii) தஸ்கியதுன் நப்ஸ்
(iv) அல்குர்ஆனின் அற்புதம்

## பகுதி II

**4.** (i) அரேபியர் இலங்கைக்கு வருகைதந்தமைக்கான காரணங்களை விளக்குக.
(ii) அரேபியர்களின் வருகை காரணமாக ஏற்பட்ட விளைவுகளை விபரிக்குக.

**5.** பின்வரும் விடயங்கள் பற்றி விபரிக்குக.
(i) உலக முடிவில் பெரிய அடையாளங்கள்
(ii) தடைசெய்யப்பட்ட உணவு வகைகள்

**6.** பின்வரும் விடயங்கள் பற்றி விபரிக்குக.
(i) ஹுகூகுல் இபாத்
(ii) இஸ்லாத்தில் இன நல்லிணக்கம்

**7.** இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் பற்றி பின்வரும் தலைப்புகளில் விபரிக்குக.
(i) இமாம் புகாரி (ரஹ்) அவர்களின் சுருக்கமான வாழ்க்கை வரலாறு
(ii) ஹதீஸ் துறைக்கான அவர்களின் பங்களிப்பு

**8.** (i) குற்றங்களைக் களைவதற்கு இஸ்லாம் கூறும் வழிமுறைகள் யாவை ?
(ii) மேலே (i) இல் கூறப்பட்ட வழிமுறைகள் மிகப் பொருத்தமானவை என்பதற்கான காரணங்களைக் குறிப்பிடுக.

※ ※ ※